லிருந்து தர்பார் செய்பவரில்லை. ஆனால் ஏழைகளைத் தேடிக்கொண்டு அவர்களிருக்குமிடம் போய் அவர்களுடைய குறை நிறைகளைத் தாமே நேரிலறிந்து கொள்ள வேண்டுமென்கிற கருத்தும், அக்கருத்துக் கிசைந்த குணமும், குணத்துக்குத்தக்க முயற்சியுமுடையவர். நம்முள்ளிருந்து பழகிய இரண்டு மாச காலத்துள் ஜனங்களுக்கிசைந்த கவர்னர் என்று பேர் வாங்கி விட்டார். எதையும் தானே நேரில் கண்டு கேட்டு ஆராய்ந்தறியும் சுபாவ முடையவர். வீண் படாடோப மென்பது இவரிடம் கிடையவே கிடையாது. மிக்க அமைதியும் சாந்தமும் பொறுப்புமுள்ளவர். உத்தியோகஸ்தர்கள் செய்யும் அக்கிரமங்களைக் கவனித்துக் கண்டிக்கும் தன்மை வாய்ந்தவர். இராஜ்தந்திர நிபுணர். ஸர்வ ஜன மித்திரர். ஏழைக்கிரங்கி. துஷ்டநிக்ரக சிஷ்டபரிபாலன லக்ஷணமுடையவர். இப்படிப்பட்டவரை நாம் கவர்னராகக் கிடைக்கப் பெற்றது நமது பாக்கியமே. ஆனாலும் இவ்விராஜதானியின் துர்ப்பாக்கியம் அதை விட்டதில்லை. இவர் இவ்விராஜதானிக் கிசைந்த கவர்னர் என்று ஜனங்கள் இவரைக் கொண்டாடி வரும் தருணத்தில் தானே இவரை வங்காள இராஜதானிக்குப் புதிய கவர்னராக விருக்கநியமித்து விட்டார்கள். இது இவ்விராஜதானி ஏழை ஜனங்களுக்கெல்லாம் மனக்கலக்கத்தை யுண்டு பண்ணி விட்டது. பொது ஜனக் கூட்டங்கூடி இவரை இவ்விராஜதானிக்கே கவர்னராக விருக்கக் கிருபைபாலிக்க வேண்டுமென்று மாக்ஷிமை தங்கிய சக்கரவர்த்தியவர்களுக்கு விண்ணப்பம் செய்து கொண்டிருக்கிறார்கள். இங்கிலீஷ் தெரியா இவ்விராஜதானிஜனங்களுக்காக நாமும் நயந்து விண்ணப்பம் செய்து கொண்டிருக்கிறோம். கனம் பொருந்திய லார்ட் கார்மிகேல் அவர்களுக்கே ஒரு பஹிரங்கக் கடிதமெழுதி யிருக்கிறோம். அக்கடித மூலமாய் மாக்ஷிமை தங்கிய சக்ரவர்த்தியவர்களுக்கும், இராஜப்பிரதிநிதி, இந்தியா மந்திரியவர்களுக்கும் லார்ட் கார்மிகேல் இவ்விராஜதானிக்கு கவர்னராயிருப்பதைக் கலைக்காமல், இவ்விராஜதானியார் அவரால் ஆளப்படும் பாக்கியத்தை ஐந்துவருஷகாலம் அனுபவிக்க அருள்புரிய வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறோம். ஸிம்மாஸனாதிபதியான மாக்ஷிமை தங்கிய சக்ரவர்த்தி யவர்களுக்கும் அடிதொழுது ஆத்மபூரணமாய் விண்ணப்பம் செய்து கொண்டிருக்கிறோம். அவ்விண்ணப்பத்தை சக்ரவர்த்தியவர்கள் அந்தரங்க் காரியதரிசி மூலமாய் நமது சக்ரவர்த்தியவர்கள் திருச்சந்நிதானத்துக்கு அனுப்பியிருப்பதன்றி சென்னை கவர்னர், இந்தியா இராஜப்பிரதிநிதி யவர்கள், இந்தியா மந்திரி யவர்கள், இவர்களுக்கும் அதன் பிரதியொன்று அனுப்பியிருக்கிறோம். கடவுள் திருவுள்ளம் யெப்படியாமோ தெரியவில்லை. அதற்குள் லார்ட் கார்மிகேல் வங்காளத்துக்குப் போவது நிச்சய மென்கிறார்கள். அது நிச்சயமானால் அவரைப் போலொத்த ஓர் உத்தம புருஷனை இவ்விராஜதானிக்கு கவர்னராக அனுப்ப வேண்டு மென்பது இவ்விராஜதானி ஜனங்கள் எல்லாரும் சேர்ந்து செய்யும் பிரார்த்தனையாக விருக்கிறது. இப்பொழுது ஸ்காட்லாந்துக்கு மந்திரியாக விருக்கும் லார்ட் பேன்டலாண்ட் என்பவர் இவருடைய ஸ்தானத்தில் சென்னைக் கவர்னராக வருவாரென்று தந்தி வந்திருக்கிறது. இவரும் லார்ட் கார்மிகேல் அவர்களைப் போலவே மாஜி மிஸ்டர் கிளாட்ஸ்டன் கக்ஷியார் சிக்ஷையிலிருந்து இராஜாங்க வேலைபயின்றவர் என்று சொல்லுகிறார்கள். வருகிறவர் எப்படியிருப்பாரோ வந்தபின் தான் தெரிய வேண்டும். நல்லவராய் வந்த ஒருவரை விட்டுப் பிரிவதென்றால் மனதுக்குச் சங்கடமாகத் தானிருக்கிறது. எல்லாரும் தர்ம சங்கடத்திலிருந்து தவிக்கிறார்கள். எல்லாம் வல்ல ஈசன் எப்படி வழி விடுவாரோ தெரியவேண்டும். ஸர் சார்லஸ் டிரிவேலியன் இருந்த காலத்தில் இப்படிப்பட்ட கவர்னர் இவ்விராஜதானிக்கிருந்தார். அப்புறம் பக்கிங்ஹாம் பிரபு இவ்விராஜதானிகவர்னராயிருந்த பொழுது ஏழைக்கிரங்கி யென்று நல்ல பேர் வாங்கினார். வாயால்வல்லவருக்கும் காசால் வல்லவருக்கும் வாழ்வு வந்து, மற்றவருக் கெல்லாம் தாழ்வு வந்துற்ற இக்காலத்தில் ஏழைக்கிரங்கும் சுபாவமுள்ள கவர்னர் இவ்விராஜதானிக் கவசியமாமென்பது ஜனங்களுடைய கோரிக்கை. இக்கோரிக்கையை ஈசன்தான் ஈடேற்றி வைக்க வேண்டும்.

:o:

## Progress of the Potential God from the Latent to the Patent Stage.

## (An Actual Experience).

## “ஜீவனுக்குள்ளே சிவமணம் பூத்தது”

:o:

(ஓர் அனுபவம்.)

ஜீவன் என்றால் என்ன? ஜடத்தை யபிமானித்து நிற்பது ஜீவன். ஜடம் என்றாலும் தேகம்

என்றாலும் ஒன்றே. தேகம் ஸ்தூல்சூக்ஷ்மகாரணமென மூவகைப்படும். ஜீவன் ஸ்தூலதேகத்தையபிமானித்து நிற்கும்பொழுது விசுவன் அல்லது ஜாக்ரன் என்றுபேர். சூக்ஷ்மதேஹமாகிய மனதை யபிமானித்து நிற்கும் பொழுது ஸ்வப்நன் அல்லது தைஜஸன் என்று பேர். காரண தேஹமாகிய அவித்தை அல்லது அறியாமையை அபிமானித்து நிற்கும் பொழுது சுஷுப்தியில் பிராஜ்ஞன்என்று பேர். இப்படியாயுள்ள தேஹத் திரியங்களுக்கும் பொதுவில் அபிமானியாயிருந்து ஜாக்ர, ஸ்வப்ந, சுஷுப்தி யென்கிற அவஸ்தாத்திரியங்களில் புகுந்து பிரவிருத்திக்கிறவன் ஜீவன். இவன் ஜீவவிருக்ஷத்தின் கீழ்க்கிளையிலிருந்து (கர்ம) பலன்களைப் புசிக்கிறவன். இவன் கர்மபலன்களைப் புசிப்பதை ஆனந்தமாய்ப் பார்த்துக்கொண்டு சாக்ஷி மாத்திரமாயிருப்பவன் "ஜீவசாக்ஷி" யென்று சொல்கிற கூடஸ்தன். இந்த ஜீவசாக்ஷியானது பூவில் மணம்போல் ஜீவனில் பொதிந்து கிடக்கிறது.

ஜீவன் (அபிமானி) தேகத் திரியங்களை யபிமானித்துப் பிரவிருத்தி மார்க்கத்திற் பிரவேசிக்கும் பொழுது ஸம்ஸார புருஷனுப் பேத பாவனைகளைச் செய்துகொண்டு சங்கற்ப விகற்பங்களில் சிக்கி உழல்கிறான். இதேஜீவன் தேகத் திரியங்களிலுமுள்ள அபிமானத்தை விட்டு (அபிமான மற்றதால் கர்மத்தையும் விட்டு) க்களைதீர இளைப்பாறி ஸர்வ பூதக்ஷபனைப் பஸ்மதாரணனைப் பஹிர்முகம் விட்டு அந்தர்முகனைச் சாக்ஷியைப் பார்க்கும்பொழுது அது ஸ்படிக விக்ரமாய் விளங்க, அதில் தன்னைத் தானே பார்த்துக் கொள்கிறான். இப்படி ஆத்ம தரிசனம் காண்பதே தன்னைத்தான் அறிதல் என்று சொல்லப்படும்.

இந்த அவஸ்தையில் மலம், மாயை இரண்டு மற்று சிவன், சக்தி, ஜீவன் என்கிற மூன்றுமே மிஞ்சி நிற்கும். மலமற்றதனால் தேஹமில்லை. மாயை அற்றதனால் மனமுமில்லை; பனத்தின் லக்ஷணமாகிய மருளுமில்லை. மருளில்லை யென்றால் பயக்கத்துக்குக் காரணமாகிய அறியாமையுமில்லை. மூன் தேஹத் திரயங்களையும் அபிமானித்த ஜீவன் நிவிருத்தி மார்க்கனாய், நிர்மலாகாரனாய், சிவ-சக்தியை அனுசரித்து நிற்கிறான்.

விளையாட்டு விட்ட பிள்ளை வீட்டில் வந்து அம்மையப்பனைத்தேடி அவர்கள் களைப்பிளைப்பாறச் செய்யச் சுகமாய்த் தூங்கி விழிக்கிறது. விழிக்கவும் அது அம்மா என்கிற சப்தத்தோடு கண் விழிக்கிறது. அம்மா வென்கிற சப்தத்தில் அப்பாவும் அடக்கமே. இந்த அவஸ்தைக்குத் துரியாவஸ்தை யென்று பேர். தூக்கத்துக்கப்பாலுள்ள விழிப்பு இது. அம்மையப்பனைக் கண்டுகளித்து விளையாடி யலுத்த பிள்ளை அம்மையை விட்டு அப்பனைத்தேடி, அந்த அப்பனில் அம்மையைக் கண்டுவக்கும் பொழுது "அம்மையப்ப பிள்ளை" யென்கிற "ஸோமஸ்கந்த" மூர்த்தியாக விளங்குகிறான். இதைத்தான் "சிவமணம் பூத்தது" என்று சொன்னார் திருமூலதேவராம் எம்பெருமானார்.

யோகதற்பரனான புருஷன் யாரோ அவரே யோகீசுவரர். அத்தகையோர்க்கு தேஹமே தேஹியாய்ப் பஞ்சாக்ஷர மயமாயிருக்கு மென்பர். அனாதியாயுள்ள மல மாயை சிவ சக்தி ஜீவன் ஐந்தும் அக்ஷரமா யிருப்பதுபற்றி "நமச்சிவாய வாழ்க" என்றார் மேலோர். இதுநிற்க, ஒரு யோகீசுவரர் பஞ்சாக்ஷரம் ஜபித்து, அஜபாமந்திரமாய் அதை யனுசந்தானித்து மந்திரதேவதையை சாக்ஷாத்கரித்து மந்திரதிருஷ்டாவாக விளங்கினர்.

"ஐந்தெழுத்தாய்த்தேயானு மதன்பொருள்நீயெனவே [கண்டேன்
ஐந்தெழுத்தோதியேபினுமதன்முடிவிலுனையேகண் [டேன்
ஐந்தெழுத்தடுத்தடுத்தோதியு மதன்முடிவுள்ளாண் [விலர்க்கு
நெஞ்சழுக்குநீக்குவிக்குநஞ்சுண்டகண்டன்நீயே!"

என்று நீலகண்டனென பரசிவத்தையே திபாணித்திருக்குங் காலத்தில் நியோகாரமாகித் திரிபுடி ரகிதமான அவஸ்தையில் திரியம்பகனாய் விளங்கினார்.

"நஞ்சுண்டகண்டனுரையக்கரம் நமச்சிவாயவென வைந்துண் டதனுண்மைகண்டறிவார் யாரே!" என்றுள்ள திருவாக்குப்படி, பஞ்சாக்ஷர வுண்மை தெரியாமல்தானே பஞ்சாக்ஷர ஜபம் செய்துகொண்டிருந்த பெண்ணறிவு (வித்யேசுவரி) தபஸ்வியாய்க் கண்மூடிக் கையில் ஜபமாலை யேந்தி மந்திரஜபம் செய்துகொண்டிருக்க, அத்தருணம் அம்மந்திரத்துக்கு அதிஷ்டான தேவதையான வாகீசுவரி ஸுமங்கலியுருக்கொண்டு நிர்விஷப மனசுக்குள்ளிருந்து தோன்றி "இங்கே கண்ணைமூடிக்கொண் டுட்கார்ந்துகொண்டிருக்கிறாயே, அங்கே வந்திருக்கிறான் போய்ப்பார்: அவன் எப்படிப்பட்ட வார்த்தை சொல்கிறான், கேள்!" என்று சொல்ல, அப்பெண்ணறிவும் * தண்ணுருவாய், மனந்தேறி விழித்துத் தேவியைப் பூஜித்துத் தேவியோடொன்றுபட்ட மனத்தினளாய் யோகீசுவார்முன்வந்து தட்டோடு தன்னையும் வைத்துக்கொடுத்தாள்.

"அம்மணி இதென்ன பிரஸாதம்?'

"அதுதான் பெரியவாளுக்குக் கொடுப்பது வழக்கம்?"

"இதென்ன வழக்கம்! பார்ப்போம்!—இதோ பாக்கு வெற்றிலை, பழம், புஷ்பம்—எல்லாவற்றோடும் இது வொன்றென்ன?"

"அதுதான் ஸ்வர்ணபுஷ்பம்."

"ஸ்வர்ண புஷ்பம் ஸமர்ப்பித்தையே, நிவேதனப் பொருள் எங்கே?"

"அதிலிருக்கிறது!"

"ஸ்வர்ண புஷ்பத்திலா நிவேதனப் பொருளிருக்கிறது?"

"அதுதான் ஸம்பிரதாயம்!"

"ஸம்பிரதாயப்படி தட்டு வாங்குகிறவனைத் தேடிக்கொடு அம்மணீ! இவனுக்கு சம்பிரதாயக்காசு வேண்டாம். இங்கே அந்த வழக்கமும் கிடையாது. எல்லாம் முத்திரை ரூபாயுள்ளது. முத்ரார்த்தம் தெரியாவிட்டால் பிரயோஜனமில்லை. இதையெல்லாம் நீயே வைத்துக்கொள்!"

"அப்படியில்லை; தெரிந்துதான் கொடுத்திருக்கிறது: கிரகித்துக் கொள்ளவேண்டும்."

"தெரிந்து கொடுத்ததா! பரம சந்தோஷம்! எங்கே பார்ப்போம்,—

"ஓங்காரி யென்பாளவளொரு பெண்பிள்ளை
"நீங்காதபச்சை நிறத்தையுடையவள்
"ஆங்காரி யாகியே ஐவரைப் பெற்றிட்டு
'ஹ்ரீங்காரத்துள்ளே யினிதிருந்தாளே"

என்றுரை செய்தான் எம்பெருமான். "வெற்றிலை தான் ஓங்காரி; அதன் காரம்தான் ஆங்காரி. பாக்குத்தான் பஞ்சபௌதிகப்பொருள். பழம்தான் பூஜாபலன். புஷ்பதான் ஜீவன். "ஜீவனுக்குள்ளே பூத்த சிவமணம் எங்கே?"

"ஸ்வர்ண புஷ்பம் தான் "ஜீவனுக்குள்ளே பூத்தசிவமணம்." "அல்ல! ஸ்வர்ண புஷ்பம் தான் 'நான்' எனத் தன்னைக் கொடுத்தவர் "எனதெனும் பொருளைக் கொடுக்குமோர் பெரியதாம் ரஹஸ்யமுத்ரை!"—சரிதானா அம்மணி? தெரிந்துதான் கொடுத்ததென்றதே! பாடம் சரியாக ஒப்பிக்கிறதா இது?"

"அன்றே யென்றன் ஆவியும் பொருளும் உடைமை யெல்லாமுங் குன்றே யனையாய் என்னையாட் கொண்டபோதே கொண்டிலையோ!" என்றாரல்லவோ மணிவாசகப் பெருமானும்! சரிதானா?

"நிரம்பவும் சரியாக விருக்கிறது.'

"சந்தோஷம்! ஆனால் தட்டில் ஒன்று குறைகிறதே! "குறைபொருளார்க் குண்மையோதிற்

---

* பெண்ணறிவு என்றாலும் பெண்மணி யென்றாலும் ஒன்றே. ஆணறிவு என்றாலும் ஆண்சிங்கம் என்றாலும் ஒன்றே. ஆண் சிங்கத்தின் த்வனி, 'நாதம்'; பெண்மணியின் ஒளி 'பிந்து' cf. "அழியாதிவ் வுடலங்காண் நாதபிந்து சேர்ந்தால்."

குற்றம்வரும் நற்றம்போமால், இறைமேலாணை புலம்பாதே யென்றியம்பினளென் னம்பாள் வாலை!" என்றிருக்கிறதே! அம்மணீ! குறை பொருளைக் கொடுத்தென்னைக் குறைக்கொள்ளி யாக்காதே! "நிறைபொருளா லர்ச்சித்தோர்க்கு நியமவிதியின்றே கூறு" என்றாள் என்னாத்தாள். பெண்புத்தி பிடரியிலேதானிருக்கிறதம்மா, தெரியுமா!"

"தெரியும்!"

"தெரிந்திருந்தால் முத்ரைக்கேற்ற லக்ஷியமெங்கே? தட்டில் காணோமே!'

"லக்ஷியத்தைத் தட்டில் வைத்தால் தாங்குமா!"

"அம்மாடி! உண்மையுரைத்தாய்! அப்படியானால் புருவமத்தியில வைத்துக்கொடு!"

"கொடுத்தேன் என்னைக்! கொள்வீர்!

"கொண்டேன்! கொண்டேன்! களிகூறக் கொண்டேன்! எந்தை பிரான் தன் இணையடியேற்றிக் கொண்டேன்! என்னையு மாற்றிக் கொண்டேன்! 'என்னுள்ளங்கவர் கள்வனை'க் கண்டேன், விண்டேன்! கரை திரையற்றதைக் கண்டேன்! கங்கையொடு யமுனை சேரக் கண்டேன்; திரிவேணி சங்கமத்தைக் கண்டேன்!—கங்காபவானியைக் கொண்டேன்."

"ஏகைவ சக்திபரமேசுவரஸ்யபப்பிரயோஜநார்த்தாயசதுர் [விதாபூத்
போகேபவானி, புருஷேஷவிஷ்ணு, க்ரோதேசகாளிஸமரேச [துர்க்கா."

—:o:—

## Easy Lessons in Economics.

### Lesson IX.

### குடிவாழ்க்கை:

—:o:—

### XI. பாடம்.

### வேலைக்காரரின் ஒற்றுமை.

வேலைக்காரர்கள் ஒன்று சேர்ந்து ஒற்றுமையுடன் தொழில்களைச் செய்வதினால் விளையும் பயன் அளவற்றதெனலாம். இவ்வொற்றுமை இருவகைப்படும். சில வேலைகளைப் பலர் ஏககாலத்தில் ஒன்று சேர்ந்து செய்யவேண்டியதாக விருக்கும். ஒருவன் தனியாகச் செய்து முடிக்க வியலாத பல காரியங்களைப் பலர் சேர்ந்து எளிதல் முடிக்கலாகும். ஓர் பெருங்கல்லைப் புறட்டவும், வண்டியை இழுக்கவும், சுமை தூக்கவும் மரங்களை வெட்டித்தள்ளி அறுக்கவும், மழையின்றி யிருக்கையிலேயே விளைந்த பயிரை யறுத்துத் தானியத்தைச் சேர்க்கவும், கப்பலில் கயிறிழுக்கவும், படகுகள் தள்ளவும், வீடுகட்டச் சாரம் போடவும் இவைபோன்ற பல வேலைகளைச் செய்யவும் பலர் ஒன்று சேராவிடின் வேலை யற்பமும் நடவாது. சீர்திருத்தமற்ற சில ஜாதியார் ஒருவருக்கொருவர் இவ்வித வுதவியைச் செய்யார். தொழில் செய்பவர்களில் இவ்வளவு ஒற்றுமைகூட இல்லையாயின் மிருகங்களைவிட அவர்கள் மேன்பட்டவரென்று கூற இடமிராது. பலர் ஒரே தொழிலில் ஏககாலத்தில் ஒன்று சேர்ந்து செய்வதைவிட, வேலையைப் பல பாகங்களாகப் பிரித்துக்கொண்டு ஒவ்வொரு பாகத்தைச் சிலர் தங்களுக்குரிய தொழிலாக ஏற்று, அப்பல பாகங்களையும் ஒற்றுமையுடன் செய்து முடிப்பது முக்கியமானதாகும். பலர் கூடி ஓர் படகைத் தள்ளும்பொழுது வேலை செய்வோருக்குத் தாங்கள் ஒற்றுமையுடன் வேலை செய்கிறோமென்பது எளிதில் புலப்படும். ஒவ்வொரு வகுப்பினர் ஒரோர் தொழிலின் ஒவ்வொரு பாகத்தைச் செய்யும் பொழுது, பல வகுப்பினர் சேர்ந்தே அத்தொழில் முற்றுப்பெறுமாயினும், அப்பல வகுப்பினருக்கும் தங்களொற்றுமைப்பாட்டின் பயனெளிதில் புலப்படமாட்டாது.

பயிரிடக் கலப்பை, கயிறு, கால்நடை முதலியனவும், அரிவாள், மண்வெட்டி, கடப்பாறை முதலிய இருப்பாயுதங்களும்; தச்சன், கொல்லன், குயவன் முதலியவர்களுடைய உதவியும் பயிரிடுவோனுக்கு அவசியம். இப்படிப் பயிரிடும் வேலையின் ஒவ்வோர் பாகத்தை பலர்

பகிர்ந்துக்கொண்டு செய்வதினால் நிலம் சாகுபடியாகின்றது. கலப்பையை செய்வோன் வேலையை நிறுத்தினாலும், மண்வெட்டி முதலிய இருப்புக் கருவிகளை செய்வோன் முரண்டிக்கொண்டாலும், கால்நடை கிடைக்காவிடினும் பயிரிடுதல் முடியாதென்றே கூறலாம். நடவு நடவும், காவல் காக்கவும், தண்ணீர் பாய்ச்சவும், அறுப்பறுக்கவும், தானியத்தைக் கிரயத்திற்கு வாங்கவும், இவைபோன்ற மற்ற தொழில்களை செய்யவும் ஏற்பட்டிருக்கிறவர்கள் தங்கள் தங்கள் தொழிலை செய்யாவிடின் பயிரிடுவோன் பாடு கஷ்டமாய் முடியும். இப்படி ஒரு தொழிலை முடிக்க ஒன்று சேரவேண்டிய தொழிலாளிகளுடைய வகுப்புகளைக் கணக்கிடுவது அசாத்தியமாகும்.

நமக்கு முக்கியமாய் வேண்டிய உடைகளுக்கு அவசியமான பஞ்சைப் பயிரிடுவோனுக்கு அவனுடைய கருவிகள் முதலியவற்றை செய்வோருட்பட பல வேலைக்காரர்களுடைய உதவி அவசியம். தவிர பஞ்சை நூற்போர் ஒரு வகுப்பினர்; சாயம் போடுவோர் மற்றொருவகுப்பினர்; நெய்வோரொரு வகுப்பினர். அதற்கு வேண்டிய பட்டு சரிகை முதலியவைகளுக்கு வேலை செய்வோர் பல் வகுப்பினர். இவ்வேலைகளில் சம்பந்தப்பட்ட வியாபாரி, தரகன், சுமை யெடுப்போர் முதலியோர் பலர், இவர்களுக்கு வேண்டிய உணவு, வீடு முதலிய சாமான்களை யமைப்போர் பலர். இவ்விதமாக அநேக தொழிலாளிகளின் உதவியினால் வஸ்திர மொன்று நமக்குக் கிடைக்கிறது. பஞ்சைப் பயிரிடாமல் நிறுத்தினாலும், அதற்கு வேண்டிய கருவிகள் கிடைக்கா விட்டாலும், மேற்குறித்த பல தொழில் வகுப்பினரில் ஒருவகுப்பார் வேலைசெய்யாது நின்றாலும் உடைசெய்யப்பட்டு நமது கைக்கு வரமாட்டாது.

இவ்விதமாக பல தொழிலாளிகள், தொழிலின் ஒவ்வொரு பிரகத்தைத் தங்களுக் குரியதாக்கிக் கொள்வதினின்று விளையும் பயன் பலவகைப் பட்டது. பல குடும்பத்தார் தங்களுடைய பூமியைப் பயிரிட்டு, பயிரிடுவதற்கு வேண்டிய கருவி முதலியவற்றை தங்களுக்குத் தாங்களே செய்துகொண்டு வசிப்பாராயின் வேறுதொழிலாளிகள் அவ்விடத்திலாவது சமீபத்திலாவது இல்லாதிருக்க நேர்ந்து, பயிரிடும் குடும்பங்களுக்கு மிகும் தானியத்தைக் கொள்வோரிருக்கக் காரணமில்லாமல்போக, தங்கள் உழைப்புக்கு பலன் கிடையாமல் வருந்த வேண்டியதுடன், தங்களுக்கு வேண்டிய ஒவ்வொரு பண்டத்தையும் தாங்களே செய்துக் கொள்ள வேண்டிவரும். நிலம் வளப்பமுள்ளதாக விருந்து, ஜனப்பெருக்க மில்லாதிருக்குமானால், பயிரிடுவோர் குடும்பங்களின் ஸ்திரீகள் ஆடைகளை செய்யும் தொழிலை யேற்று, வாசஸ்தலங்களை இயன்றமட்டும் குடிசைகளைப்போல் கட்டிக்கொண்டு காலங்கழிக்கலாம். கால பேதத்தினால் பூமி விளையாவிடில் உணவின்றி யவர்கள் மரிக்கநேரிடும். ஆடைகளையும் வாசஸ்தலத்தையும் இன்பந்தரத்தக்கவைகளாக அவர்களால் செய்துகொள்ள முடியாது. உயிரைத் தேகத்தினின்று பிரியாமற் காப்பதே அவர்களுக்குப் பெருந்த காரியமாகும். அவர்களால் செய்யப்படும் கருவிகளும் அவர்கள் கைத்திறமையை யொத்ததாயிருக்கும். அவர்கள் பயிரிடும் பயிரும் சரியாக விளைவது அரிது. இப்படியிருக்க அவர்கள் சுகப்பிரதமான பொருள்களைச் செய்து கொள்வது கனவிலு மில்லை. பயிரிடுதல் போன்ற இன்றியமையாத தொழில் ஒன்றைத்தவிர மற்ற தொழிலில் அவர்களுக்கு வல்லமை யுண்டாக வழியில்லை. தவிர பயிரிடுந் தொழிலையும் அவர்கள் ஒழுங்காக நடத்த சக்தியற்றவர்களாகவே இருப்பார்களென்பதில் தடையில்லை. பூமியில் சிரமப்பட்டு வேண்டிய அளவுக்குமேல் பலன் கிடைத்தாலும், அதைக்கொண்டு பெறக்கூடிய பொருளில்லை. தவிர. அப்படி கஷ்டப்படவும் அவர்களுக்கு மனம் வராது.

மேற்குறித்த குடும்பங்களிலொருவன் கருவிகள் செய்வதில் மற்றவர்களை விடத் திறமையையுடையவனுல், அவன் தானே பயிரிடாமல் யாவருக்கும் வேண்டிய கருவிகளைச் செய்து கொடுக்கலாம். அவைகளுக்குக் கிடைக்கும் தானியம், தானே பயிரிட்டுவரக் கூடியதைவிட அதிகமாயிருப்பதைக் காணலாம். அவன் செய்யும் கருவிகளைக் கொண்டுபயிரிடுவதினுல் வழக்கத்திற்கு மேலாகப் பயிர் விளைவதைப் பிறர் கண்டு, தாங்கள் கருவிகள் செய்வதை நிறுத்தி, தங்கள் சாப்பாட்டிற்கும் கருவிகளை வாங்குவதற்கும் போதுமான அளவு பயிரிடலாம்.

கைத்தொழிலின் பயனை நோக்கும்பொழுது பயிரிடுவோருக்கருகில் கைத்தொழிலாளிகளிருந்தாலொழிய, பயிரிடுவோர் தானியத்தை ஏராளமாக உற்பத்தியாகும்படி பிரயாசப்படுவதற்கு தூண்டுகோலில்லை. தங்கள் உணவுக்கு வேண்டியது போக மீதியை விற்று, தங்கள் நிலங்களில் விளையாத உணவுக்கு யோக்கியமான பதார்த்தங்களைப் பிறவிடங்களினின்று கொள்ளவும், ஆடையாபரணங்களையும் தட்டுமுட்டு சாமான்களையும், வீட்டுக்கலங்காரமான பொருள்களையும் வாங்கவும் வகையில்லமாற்போனுல் தானியம் மீரும்படி பயிரிடமாட்டார்கள். தம்முடைய தேசத்தில் விளையும் தானியங்களை நாம் பிறதேசங்களுக்கு அனுப்பி அதன் கிரயத்தைக் கொண்டு அத்தேசங்களின் கைத்தொழிலாளிகள் செய்யும் சாமான்களை வாங்குகின்றோம். கைத்தொழில் வேண்டிய அளவு நம்முடைய தேசத்திலேயே அங்கங்கு நடக்குமாயின் பயிரிடுவோர்களுக்கு வெகு நன்மை விளைவது மல்லாமல் நம்முடைய ஜனங்களுக்கு ஜீவனமும் கஷ்டமின்றி நடக்கும்.

நம்முடைய தேசத்தில் பயிரிடுவோர் கையாளும் கருவிகள் பிரயோஜன மற்றவை. கலப்பை இரண்டங்குலத்திற்கு மேல் ஆழமாயுழமாட்டாது. பூமியிறுகியிருந்தால் பெயர்க்கச் சக்தியற்றது. அதனுல் விளைவுகுன்றி நஷ்டமுண்டாகின்றது; பல ஜில்லாக்களில் உழவு சரிவர நடத்த மாடுங் கலப்பையு மில்லாததினுல் கோடையில் மழையின்மையைக் கிராமந்தோறும் வேண்டிக் கொண்டு நிற்பார்கள். அவ்வேண்டுதல் நிறைவேறி நதியில் சரிவரப் பிரவாகம் வருமாயின், உழவின்றியும் எருவின்றியும் நிலமேராளமாக விளையும். கோடையில் மழை பெய்து விடுமானுல், கலப்பை வுழக்கத்திற்கு மேலுழ பாட்டாதாகையால், நிலத்தினூன்றினபயிர் ஊன்றினபடியே நிற்கும். தகுந்தகருவிகள் சமீபத்தில் கிடைக்குமாயின் தொழிலாளிகளும் அவைகளை வாங்கி நல்ல பயனையடைவார்கள்.

மனிதனுடைய முயற்சியை வேண்டாதுபூமி ஒவ்வொரு முறை தானியத்தை ஏராளமாய்க் கொடுப்பதால், விளைவு அதிர்ஷ்டத்தைப் பொருத்ததென்று எண்ணி, வேலையைக்கிரமமாக நடத்தாமல் பயிரிடுவோர் நஷ்டமடைகின்றனர்.

T. C. வெங்கடரமணய்யர்.

---

## Come Ye and See
## "The Deceiver who steals away my heart."

"எனதுள்ளங்கவர் கள்வனைக் காணவாரீர்!"

---

"நீர்பரந்தநியர் புன்சடைமேலோர்
நிலாவெண்மதிசூடி
யேர்பரந்தவின வெள்வளைசோரவென்
னுள்ளங்கவர்கள்வன்
ஊர்பரந்தவுல கின்முதலாகிய
வோரூரிதுவென்னப்
பேர்பரந்தபிர மாபுரமேவிய
பெம்மானிவனன்றே."—திருஞானஸம்ப
[ந்தர் தேவாரம்.

"அப்பநீ, ஐயநீ, அம்மநீ, அன்புடைய மாமனும் மாமியுநீ, ஒப்புடைய தாரமும், உண்பொருளுநீ, ஓர்குலமும், சுற்றமும், ஒருருந்நீ, துணையாய் என்னெஞ்சம் துறப்பிப்பாய்நீ, இப்பொன்நீ, இம்மணிநீ, இம்முத்துநீ, இறைவநீ, ஏறூர்ந்த செல்வநீயே!" என்று அப்பர் ஸ்வாமிகள் பாடியபடி "எல்லாம் அவனே" யென்றுள்ளத் துணர்ந்து, உணர்ந்தபடி யறிந்து, அறிந்தபடி யொழுகி, ஒழுக்கில் இழுக்கின்றி உண்மைநிலை தவறுது நின்றதனியேனை "என்னப்பன், என்னய்யன், என்மனத் துப்பன், மாசிலாமெய்யன் பரிசோதனை செய்வான் மெள்ளவந்து உள்ளம்புகுந்து கள்ளஞ்செய்து காணுமல் மறைந்தான். "எனதுள்ளங்கவர் கள்வனைக்" கண்டுபிடிக்க நான் எங்கும் தேடித்தேடி யலைந்தேன்: தள்ளாடிக்கீழ்விழுந்தேன்.

காலயர்ந்து கைசோர்ந்து நெஞ்சயர்ந்து மூச்சடங்கி வீச்செல்லாம் ஒடுங்கியபின், பேச்சுமூச்சில்லாப் பிரமபுரத்திலவனைக் கண்டுகளித்தேன். ஸ்ரீபுரச் செல்வன், பிரமபுரத்தலைவன், திரிபுரதகனம் செய்தவோர் தீரன், எரிபுரம்விட்டு ஊர்ப்புரம் வந்தான்!

நாற்புரமதிலும் நல்லிசையோசையும், கீழ்ப்புரமதிலே ஐசுவரஸ்தானமும், தென்புரமதிலே நிச்சல விசாலமும், மேற்புரமதிலே வைராக்கியக்கோட்டமும், வடபுரமதிலே ஞான ஸ்தானமும், நாற்புர மத்தியி லுள்ளவோர் நடுவில் ஜ்யோதிர் லிங்கமாய் ஜ்வலித்திடக் கண்டேன், கண்டேன் கலிதீர்ந்தேன்! எனதுள்ளங்கவர் கள்வனைக்கண்டேன், கண்டேன், கலிதீரக் கண்டேன்! கண்டவன் கால்பிடித்திணையடி தொழுது நின்றேன், நின்றேன், நிலையறிந்துநின்றேன்! வென்றேன், வென்றேன், வெளிதருமயலை வென்றேன்!

"தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச் சங்கரா! ஆர்கொலோசதுரர்?" என்றேன், என்றேன், என்னகந்தைதீர் அண்ணலையுவந்தே. "அந்தமொன்றில்லா ஆனந்தம் பெற்றேன் யாதுநீ பெற்றதொன்றென்பால்!" என்றுரை செய்தேன், செய்தேன், ஜயமுறச்செய்தேன்! பஹிரஹ முகமெனும் பாவனையெலாம் விட்டுள் நின்றேன், நின்றேன், நிலைபெற நின்றேன்!

"சிந்தையேகோயில்கொண்ட எம்பிரான் திருப்பெருந் துறையுறை சிவனே" "யென்னுள்ளங்கவர் கள்வன்" என வுணர்ந்தே னுணர்ந்தேன்! உள்ளக்குறைதீரவேநா னுணர்ந்தேன், உணர்ந்தேன்!! இது மெய்யென வுணர்ந்தேன், புணர்ந்தேன்; பொன்னம்பல நாதனைக்கூடியே புணர்ந்தேன், புணர்ந்தேன்; புன்புலால்யாக்கைப்பொடிபடப் புலன்பொறி யழித்து புணர்ந்தேன், புணர்ந்தேன்! பொன்னம்பல நர்த்தனைப் புணர்ந்தேன் மணந்தே!

"எந்தையே ஈசா! உடலிடங்கொண்டாய்! யானிதற்கிலனேர் கைம்மாறே" என்றுரை செய்தேன் னேழைமை விளித்தேன், விளித்தேன்! எனதுள்ளங்கவர் கள்வனைக் கண்டுபிடித்தேன், பிடித்தேன்! பிடித்தபிடிவிடாமற்றுனே பிடித்தேன், பிடித்தேன்! எனதுள்ளங்கவர் கள்வனைக்காணவாரீர், வகைமோசம்போகாது வாரீர்! ஜகத்தீரே வாரீர்!

"புகவே வேண்டா புலன்களில்நீர்!
புயங்கப் பெருமான் பூங்கழல்கள்
மிகவே நினைமின் மிக்க எல்லாம்
வேண்டா போக விடுமின்கள்!
நகவே ஞாலத் துள்புகுந்து
நாயே அனைய நமைபாண்ட
தகவே உடையான் தனைச்சாரத்
தளரா திருப்பார் தாந்தாமே!"

* * *

"அடியார் ஆனீர் எல்லீரும்
அகல விடுமின் விளையாட்டைக்;
கூடிசேர் அடியே வந்தடைந்து,
கடைக்கொண் டிருமின் திருக்குறிப்பைச்

செடிசேர் உடலைச் செலநீக்கிச்
சிவலோ கத்தே நமைவைப்பான்
பொடிசேர் மேனிப் புயங்கன்றன்
பூஆர் கழற்கே புகவிடுமே!"

* * *

"புகழ்மின், தொழுமின், பூப்புனைமின்,
புயங்கன் தானே புந்திவைத்தி
டிகழ்மின் எல்லா அல்லலையும்,
இனிஓர் இடையூ றடையாமே
திகழுஞ் சீரார் சிவபுரத்துச்
சென்று சிவன்றாள் வணங்கி,நாம்
நிகழும் அடியார் முன்சென்று
நெஞ்சம் உருகி நிற்போமே."

* * *

"நிற்பார்நிற்க, நில்லா உலகில்
நில்லோம் இனிநாஞ் செல்வோமே,
பொற்பில் ஒப்பாந் திருமேனிப்
புயங்கன் ஆள்வான் பொன்னடிக்கே!
நிற்பீர் எல்லாந் தாழாதே,
நிற்கும் பரிசே ஒருப்படுமின்
பிற்பால் நின்று பேழ்கணித்தாற்
பெறுதற் கரியன் பெருமானே!"

ஓம்தத்ஸத்.

ஆண்டானடிமை.

---

## "The Sorrows of Satan."

## (*With Apologies to Miss Marie Corelli.*)

## "மொட்டைத்தாதன் குட்டையில்விழத் தட்டுவாணி தாலி யறுத்தாள்."

---

"மொட்டைத்தலை" ஸந்யாசிக் குறிகுறி யென்றும், "குடுமித்தலை" குடும்பி அல்லது ஸம்ஸாரிக்கு அறிகுறி யென்றும், "முழுதும் மயிர் வளர்ந்ததலை" யோகிக்கு அடையாளம் என்றும் சுருதி முறையிடுகிறது. "தாதன்" என்றால் தத்பத லக்ஷியத்தில் சிந்தனை செலுத்தியவன். "மொட்டைத் தாதன்" என்றால் "உண்மையான ஸந்யாசி" யென்பது அதனுடைய நிஜமான அர்த்தம். ஆனால் மொட்டைத் தலையனெல்லாம் ஸந்நியாசியல்லன்: "தாதன்" என்று பிச்சைக்கு வருகிறவனெல்லாம் தெய்வத்தைச் சிந்திப்பவனுமல்ல. ஏதோ ஆயிரங்கோடியிலொருவன் உண்மையான ஸந்யாஸயோகத்தை ஆச்ரயித்து பிக்ஷை யெடுத்துண்டு ப்ரஹ்மோபாஸனையினால் பிரஹ்மத்தை யறிகிறான். அப்படி அறிகிற ஒருவனுக்குப் பதினாயிரம் லக்ஷம் பேர் அவனைப்போல் வேஷம் போட்டுத் திரிந்து வயிறு வளர்க்கிறவர்களாயிருக்கிறார்கள். இது உலக வழக்கம். சித்த முத்த புருஷராகிய திருமூலதேவரும் முதலில் "உடம்பினை யிழுக்கென்றிருந்தேன்" என்று சொல்லிவிட்டுப் பின்னால் உண்மை யுணர்ந்த பின், உடம்பினை ஓம்புதல் அவசிய மென்று கண்டு, "உடம்பை வளர்த்தேன், உயிர் வளர்த்தேனே" யென்று சொல்லி யிருக்கிறார். ஆகையால் உடம்பை வளர்த்ததால் உயிர் வளர்த்ததாகும்படி தேஹஸம்ரக்ஷணை செய்பவரே உண்மையாக உடம்பினைப் பெற்றபயனை யடைந்தவராவர்.

"உடம்பினைப்பெற்றபயனாவதெல்லாம்
உடம்பினிலுத்தமனைக்காண்."—ஔவைகுறள்.

மற்றவர்களெல்லாம் மருளில் மயங்கி இருளில் அலையப் பிறந்தவர்களே.

"குட்டை" யென்பது தீர்த்த குண்டத்துக்குப் பேர்: அழுக்கு ஜலம் தங்கி நிற்கும் பள்ளத்துக்கும் பேர். "மொட்டைத் தாதன்" உண்மையான ஸந்யாசியாயிருந்தால் அவன் ஒருக்காலும் அழுக்குக் குட்டையில் விழமாட்டான். அப்படிக்கில்லாது, வயிற்று வளர்ப்புக்காக வேஷம் பூண்ட மூடாத்மாவானால் "குருடரும் குருடரும் குருட்டாட்டமாடிக் குழிவிழுந்தற்றே' யென்ற திருமந்திரப்படி,

அசத்துக்களுக் குரியதான நரகக் குழியே அவர்களுக்கு கதியாதலால், அவர்கள் அழுக்கு நீர்க்குட்டையில் தான் விழுந்தார்களென்பது நிச்சயம்.

"மொட்டைத் தாதன் குட்டையில் விழுந்தான்" என்றால் உண்மையான ஸந்யாசி தேவி பதம் பெற்று (அறிவு மயமாகி), "போகே பவானி' யென்ற வாக்கியப்படி "பவானியோக ஸம்யமனுப்'' பரமேசுவர சாயுஜ்யமாகிற கைவல்ய முத்திபெற்றான் என்பது உண்மையான பொருள்.

"வேஷக்காரனாகிய மோசக்காரன் நரகப் பிராப்தி யடைந்தான்" என்பதும் அதிகார பேதத்தால் அதற்கு வாச்சியார்த்தமாகப் பொருந்தும்.

எதுவாயினும் வார்த்தையில் தோஷம் ஒன்றுமில்லை. பதார்த்தம் ஒன்றே. லக்ஷியார்த்தமும் ஒன்றே. வாச்சியார்த்தம் மட்டும் அதிகார பேதத்தால் பேதப்பட்டு விளங்கும்.

காரணகாரியதோரணை யறியாதார் எல்லாமறிந்தவர்போல் ஒருதலை நியாயம் பேசி, ஓர வஞ்சகமாய் ஒருதலைத் தீர்ப்புச் சொன்னால் அதற்கு ஸத்துக்கள் என்ன சொல்வார்கள்? என்று பிறந்த கேள்விக்கு பதிலுரைப்பான் இப்பழமொழி குருமொழியாகப் பிறந்து வழக்கத்துக்கு வந்தது.

"மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிபோடுகிற சாமர்த்தியம்" மாயாசக்தி யொன்றுக்கே யுண்டு. மொட்டைத் தலையில் மயிர் இல்லை, முழங்காலிலும் மயிர் இல்லை. இரண்டுக்கும் முடிபோடுவது உண்மையில் முடியாதகாரியம். இப்படி அசாத்தியமான காரியத்தைச் சாதிப்பேன் என்று விருதுகட்டிக் கொண்டு கிளம்பினால் அவனை மாயாவி (ஜால வித்தைக்காரன்) என்று நாம் கொள்ளவேண்டுமேயன்றி வேறு எவ்விதத்திலும் அவனைக் கருத இடமில்லை. மலடிமகன், முயற்கொம்பு, ஆகாசத்தாமரை, கானல் ஜலம், இவைகளைப் போல சுபாவத்தில் இல்லாத பதார்த்தத்தைக் கற்பிக்கும் சாதனை "intellect" என்று சொல்லும் பேதபுத்தியாம் மனோசக்திக்கேயுண்டு. இது மூக்கியமாக மூளையை ஆதாரமாகக் கொண்டு வேலைசெய்யும். இதற்கு நியாய அநியாயமில்லை. "கண்டதேகாட்சி, கொண்டதே கோலம்" என்பது இதற்கே பொருந்தும். இது எப்போதும் உண்மைக்குக் கட்டுப்பட்டு நடக்காது. ஆகையால் இந்த பேதபுத்தியை வியபசாரிக்கு ஒப்பிட்டுச் சொல்வது வழக்கம்.

எமர்ஸன் என்னும் மஹாத்மா இதை வியபசாரியென்றே சொல்லி யிருக்கிறார். "Intellect is a whore" என்பது அவருடைய திருவாக்கு. வியபசாரி யென்றாலும் "தட்டுவாணி" யென்றாலும் ஒன்றே. இந்த வியபசாரத்துவம் "வைகரிவாக்குக்கு" விசேஷமாயுண்டு. ஏனெனில் மனம் ஒன்று நினைக்க, வாய் ஒன்று பேசும். வாக்கு வியபசரித்தால் உண்மையை ஓர்ந்துணரமுடியாது. ஆதலால்தான் "ஸத்யம்வத" என்று வேதம் முறையிடலாயிற்று. வாக்குக்கு அதிஷ்டானமாயுள்ளது மனம். மனமோ சங்கல்ப விகல்பரூபமானது. சங்கல்ப விகல்பமான மனது எப்போதும் சஞ்சலத்திலாழ்ந்து பேயாட்டம் ஆடும். பேய்க்கு வாழ்க்கைப்பட்ட வாக்கு (வாணி) எப்போதும் தட்டுப்படும். சித்த வாக்குப்போல் பலிக்காது. "மெய்யேவெல்லும் பொய்யல்ல" என்பது பொய்யாமொழி. "ஸத்யமேவஜயதே நாந்ருதம்" என்பது வேதவாக்கு. எப்படி உண்மையான ஸந்யாசியைப்பார்த்து அவனுடைய இதயசுத்தியும் மனோபக்குவமு மில்லாத ஆஷாட்பூதி தானும் தலையை மொட்டையடித்துக்கொண்டு "தாதன்" என்று வயிற்றுவளர்ப்பின் பொருட்டு வெளிக்கிளம்புவதினால் ஸந்யாச யோகத்தின் பலனான கைவல்யஸாயுஜ்யம் பெறாமல் நரகக் குழியாகிய குட்டையில் விழுகிறானோ அப்படிப்போல, சங்கல்ப

பொன்று வார்த்தை யொன்றுசவிருக்கிற அமங்கலையான வாக்கும் "தட்டுவாணி" யாக வியபசரித்து வழங்கும். இந்த வார்த்தையினுல் வாய்க்கு நோவன்றி வேறு பாரமார்த்திகமான பிரயோசன மொன்றுமில்லை. இப்படிப்பட்ட வியபசாரவாக்குக் கண்டதெல்லாம் பேசுமானதால், இது செய்யும் வியபசாரத்தால் வாக்குக்கு அதிஷ்டானமான மனதும் இருளடைந்து மருள்திரண்டு மாயாரூபமாக துவந்தத்திலாழ்ந்து வருந்தும்.

"பேயைப் பெண்டாண்டு பேய்க்கோலந் தானுகி
மாயை மயக்கால் மனமெல்லாம் புண்ணுகித் [க்கி
தூயைத் தொழுதழுது துவந்துவமெல்லா மறப்போ
காயைப் பழமாக்கும் கருணையொ டொன்றுனே
[னே."

என்பது அனுபவவாக்கு.

தாலி யென்பது மாங்கல்ய முத்திரை; புருஷனுடைய தீர்க்காயுஸுக் குறிகுறியான சின்னம். புருஷஸம்பம மில்லாப் பிரகிருதி (பெண்) விதந்துவே. அறிவில்லா (உண்மை யறிவில்லா)ப் புத்தியின் வாழ்வு வாழ்வில்லையென்று சொல்வான் "அறுதலி வாழ்வுங் கொப்பு" என்று சொல்வர் மேலோர். தாலியறுத்தவள் "அறுதலி." அதாவது, மாங்கல்ய முத்திரை யிழந்தவளுக்கு மங்கல வாழ்வில்லை யென்றபடி.

"மொட்டைத் தாதன் குட்டையில் விழத் தட்டுவாணி தாலியறுத்தாள்" என்றதற்கு உலகார்த்தம் என்னவெனில், "மோசம் செய்யும் வேஷக்காரன் நாசமாய்ப்போக வியபசாரி வாழ்விழந்தாள்" என்பதாம். ஏனெனில் எந்தக்காரியமும் சக்தியின்றிச் சாயாது. சக்திமானழிந்தால் சக்திக்கு வாழ்வு (பலம்) இல்லை.

லக்ஷியார்த்தம் செய்தாலும் உண்மையே வெளிப்படும். "வேஷக்காரன் நாசமாய்ப்போவது" சகஜம்! ஏனெனில், "குருடரும் குருடரும் குருட்டாட்டமாடிக் குழிவிழுந்தற்றே" யென்ற உவமானத்தால். இது உலகத்தில் யாவரும் அறிந்த சகஜானுபவமாம்.

"வேஷக்காரன்" இல்லாவிட்டால் "வியபசாரிக்கு"த் தொழில் நடத்தமுடியாது. ஏனெனில் (கிரகஸ்தன், யோக்கியன்) வியபசாரியை ஆச்ரியிக்க மாட்டான். இவர்கள் இருவருக்கும் ஒருவித உறவு மேற்படாது. வியப்பசாரி வாழ்வெல்லாம் அயோக்கியர் உள்ளமட்டும் தான். அயோக்கியர் ஹதமாகப் போனுல் வியபசாரிக்கு வாழ்வு போயிற்று: இது ஸ்பஷ்டம். ஆனுல் வெளிவேஷத்தைக்கொண்டு பார்க்கில், "மொட்டைத்தாதன்" எல்லாம் விட்டவன், நாதியற்றவன். இவனுக்கும் தட்டுவாணிக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை! ஆகையால், மொட்டைத் தாதன் குட்டையில் விழுந்தால், தட்டுவாணி தாலி யறுப்பானேன்? என்று சாமானியர் கேட்டு ஆச்சரியப் படுவர். "பாம்புக்குத் தெரியும் பாம்பின் கால்" என்றிருப்பதால், "களவையுங் கற்றுமற" என்று ஓதினர் பெரியோர். களவு கற்றவன் தான் களவாணியின் 'குட்டை'க் கண்டு பிடிப்பன். அதையே நினைத்துக் கொண்டிருந்தால் "யத்பாவம் தத்பவதி" யென்கிறபடி களவு செய்யும்படி வரும்! ஆகையால் உளவறிந்து களவாணியின் உண்மை யறிந்துகொண்டு, பின்னர் உண்மையைப்பற்றி நின்று மற்றதை மறந்துவிடல் வேண்டும்.

நான் ஒருவாரத்துக்குமுன் ஒரு பொது ஸ்தலத்தி லிருக்கையில் பழைய நண்பர் ஒருவர் என்னைக் கைப்பிடித் தழைத்துப்போய் நல்லதோர் உபதேசம் செய்தார். சென்னைக் கவர்னருடைய மந்திராலோசனை சபையில் ஒரு மெம்பராக விருந்து காலஞ்சென்ற கனம். வி. கிருஷ்ணஸ்வாமி ஐயரவர்கள் மதுமேகத்தால் பாதிக்கப்பட்டவரா யிருந்து அதனுல் வந்த ராஜப்பிளவைக்குச் சத்திரம்வைக்க அது புரையோடி "உயிரைவௌவவந்த கள்வன் சன்னம் வைத்ததுபோலும் காட்டி" ப்பிராணனை மாய்த்ததானபடியால், இப்படிப்பட்ட மஹாத்தான "மதுமேகம்" மனிதரை நளினமாய்ப்பற்றுவதற்கான காரணத்தையும் அதற்குச் செய்யக்

கூடிய சிகிச்சைகளையும், சாஸ்திரார்த்தமாகப் பரிசீலனை செய்திடவேண்டி ஒரு வைத்திய ஆராய்ச்சி சாலை (Researc'. Lv'o:otary) ஏற்படுத்த வேண்டுமென்றும், அதற்காக அவருடைய ஞாபகச்சின்ன கமிட்டியார் அனுகூலத்தைத்தேடி, இறந்தவரால் மைலாப்பூரில் ஏற்படுத்தப்பட்ட வெங்கட்ரமண. வைத்தியசாலை சம்பந்தமாக ஒரு ஆராய்ச்சி சாலை யேற்படுத்த முயற்சிக்கவேண்டுமென்றும் கலந்து பேசி நலம்பட வுரைத்தார். அதைப்பற்றி ஆர அமர்ந்து யோசித்து அந்த யோசனை நல்லதென்று உவந்து அவ்வைத்தியசாலை சம்பந்தமான பிரமுகர்கள் சிலரைக்கண்டு கலந்து பேசி அதற்காக வேண்டிய முயற்சிசெய்து திரும்புகையில், திடீரென்று மூலாக்னி மூண்டெழுந்து "எரிமலையின் உள்வாயுள் அக்னிகுண்டம் கொதிப்பதுபோல்' கொதித்துக் குமுறிக்கொண்டெரிந்தது! "ஐயோ! உள்ளங் கொதிக்கிறதே! யாரிட்ட சாபமோ! எவர் செய்த மோசமோ! வேறென்ன சதி பாதகமோ! தெரியவில்லையே"! என்று தவித்துக்கொண்டிருக்கையில், "மோட்டைத்தாதன் குட்டையில் விழத் தட்டுவாணி தாலியறுத்தாள்" என்று இழவோலை கொண்டுவந்தது போல ஒரு யமதூதன் ஓலை கொண்டுவந்து நின்றான்! கண்டது கனவோ நனவோ அறிகிலேன். கனவு நனவழிந்த விடத்தில் ஏறியிருந்து (துரியஜாக்ரத்தில்) அதனுண்மையை ஆய்ந்தோய்ந்து பார்த்தமர, அக்கிரமக்காரன் அழிவழக்குரைத்திடப் பொய்க்கிரம நீதியில் பலித்திடவோதிய வியபசாரவாக்கும் உபசார உண்மையும் பொய்யெனக் கண்டேன். "மெய்யேவெல்லும் பொய்யல்ல"வென்று அசரீரிவாக்கு அம்பரத்தில் முழங்கியது. "ஸத்யமேவஜயதே நாந்ருதம்" என்ற வேதவாக்குப் பொய்க்காது! ஸத்யமே ஜயித்ததென்று உள்ளம் பூரிக்க உண்மையில் "நானெனதென்பது மறியேன்" என்றபடி, என்னைமறந்து தன்னந்தனியே தனியனுபிருந்து "தர்மபிக்ஷை" யெடுத்துப் பிழைத்தேன். உண்மையில் உவப்பிலிநாதனும் "தேஹி" யென்றேற்து "நாஸ்தி" யென்னாமல் "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்று கையிலறைந்து அபயங்கொடுத்து வாதராஜனைப் நின்றெனை வந்தித்தருளினன். ஆகவே 'மோட்டைத்தாதன் குட்டையில்விழத் தட்டுவாணி தாலியறுத்தாள்" என்றொலித்த யமதூத வசனத்தைக் கேட்டுச் சரிசரி யென்று சம்மதித்தேன். நரகராஜன் நைந்துருகவே! †

உண்மைச்சந்யாஸ யோகத்தி லமர்ந்தவன் கைவல்ய முக்திபெற்றால் "ஞானமென்பது மோனவரம்பு" என்றபடி வாக்கு மோனத்திலொடுங்கிவிடும்: வைகரிவாக்குக்கு வாழ்வில்லையாகும். வாக்கொடுங்கில் நரகராஜன் நலமிழந்தான்!

இந்தக் காலத்து வக்கீல்கள் நியாயம் பேசுகிற தோரணையாய் எட்டுச் சுரைக்காயைக் கொண்டு கறிசமைக்க யத்தனிக்கும் அறிவிலிகள் "நானும் ஸந்யாஸ யோகம் செய்கிறேன்" என்று அஹத்திலொன்றும் 'புறத்திலொன்று'மாக நடக்கும் பாஷண்டர்களான போலி ஸித்தர்கள் "மொட்டைத் தாதன்" வேஷம் போட்டு, "ஆண்டவன் மலைமேலாண்டி, நான் கீழேயாண்டி' யென்று சொன்னவன் கதையாகக் "குருடரும் குருடரும் சேர்ந்து குருட்டாட்டமாடிக் குழிவிழுந்தாற்றே" யென்றபடி அழுக்காறு நிறைந்த குட்டையில் விழுந்தால், அதுவும் நல்லதே! ஏனெனில் அயோக்கியர்கள் அக்கிரமமிகுந்து எரிநரகுக் காளாவராயின் உலகத்தில் அக்கிரமங்கள் அடங்கும். அதர்மம் வாழ்வற்றுப் போகத் தர்மம் தலையெடுக்கும். ஆகையால், இருவிதத்திலும் "மொட்டைத் தாதன் குட்டையில் விழத் தட்டுவாணி தாலியறுத்தாள்" என்ற பழமொழி உண்மையே! உண்மையானதுபற்றி அப்பழமொழியே மறைமொழியாகவும், குருமொழியாகவும் கொண்டு ஸர்வகாரண பூத சக்தியும் வாக்கின் ஸ்வரூப தேவதையுமான ஸ்ரீகுருவுக்கு 'ஓம் நமோ நமஃ" என்று உள்ளம் பூரிக்கப் பன்முறை பணிந்து நமஸ்கரிக்கிறேன்.

ஓம் தத்ஸத்.

† To the great and melting sorrow of Satan.

(1901-1912.)
Ananda Mission Founder's Day.
The Twelth Arudra Celebration.

AUM.

Our Motto:
"Hitch your wagon to a Star" and
"Let the Current that knows its way."

"Our Theism is the purification of the Human Mind." Our Method: "Satyam Vada!"-Dharmam Chara!"

# THE TRUTH BEHIND THE CORONATION DURBAR.

"The Kingdom of the World is become the Kingdom of our Lord and of His Christ."

## "THE MISSION OF THE EMPIRE AND THE WORLD."

"Here then lies the work of our Empire in the coming years" and of

THE ANANDA MISSION WHICH AIMS AT REALISING THE PERMANENT VALUE

Of Any Empire or Any Social Institution by making real and effective in the World

## "THE IDEAL OF BROTHERHOOD" OR "CHRISTLY LOVE"

—*The Paramkarunai which feeds on and grows Perfect by "Neighbourly Love" or Jeevakarunian.*—

"LET US NOT FORGET"

"That the achievement of this great end does not lie merely with statesmen and politicians,
"but Far More with the Ordinary People in the Ordinary Routine of Daily Life."

"Life is real, Life is earnest;
And the grave is not its goal."

IT was a splendid service which the Bishop of Madras rendered to the cause of truth and the coming of the Kingdom of God, in the impressive sermon, which he preached to the world from the Coronation Durbar Camp on Sunday last. (10th Dec.) The Truth behind the Coronation Durbar is that "the Kingdom of the World is become the Kingdom of Our Lord and of His Christ." The Lord Bishop said that he spoke only as the representative of the Christian Community in India, but every community and every religion will admit the Truth behind the Coronation Durbar in the text which he took up for his sermon. Only they will not consent to limit the full spiritual meaning of the expressions used by any narrow interpretation of sect or creed. "The vast responsibility of Empire" rests not on the shoulders of the King alone, but on all who are subjects and citizens of the State and so form the body-politic of the Empire of which the King is the symbolical head as the devine representative of Godly Power on earth.

"Among men I am the King," said the Lord Sri Krishna to Arjuna, and the accepted Ideal of Kingship as propounded by our *Dharmasastras* is the same as the Lord Bishop of Madras so well and happily expressed in the beautiful sermon which he preached from his place in the Coronation Durbar Camp. "Rajah" means one who pleases all entrusted to his care.

"The history of the world is the gradual fulfilment, even through the working of human passions and ambitions, of God's Eternal Will. Whatever is out of harmony with that Will comes to nought. Whatever opposes it is swept away." "The Kingdom of the World" must *ever remain* "the Kingdom of the Lord" and of His Son, the anointed of the Lord and the Saviour of men. I use Christ in the fullest significance of the word as "the Son of God and the Saviour of men"—*the Kumara Guru*—"the Son and Saviour" with whom every Hindu is only too familiar.

The Bishop of Madras has lifted on high the Holy Flag of Truth, and may all true sons of Barathavarsha and the Empire stand by it and fight for Truth—for Truth is a principle that must triumph in the end. Let us, by all means, sweep away the narrow traditions and unspiritual (unchristian) feeling that make the Brotherhood of Man impossible. I trust everyone will bear in mind the exhortation of the noble minded Bishop who expressed the need of the hour as "a sincere effort on the part of individual men and women to look fairly at the facts of life in the spirit of Christ (which is the Spirit of Truth and of Self-Sacrifice) and to apply to their relations with all classes and all races the principle of Brotherhood." All India and "the better mind of India" which is keeping 'the Altar-Fire of Consciousness' (*Chidagnikunda*) alive by sacrificing their own individual selves therein say 'Amen' to this.

As one who has been working now for eleven years uninterruptedly in the cause of truth, ever trying to keep "the Highest Ideal" before man, it gives me great pleasure to bear willing testimony to the truth of the Bishop's statement, that in spite of the frailties and failings of the majority of Engilshmen such as we ordinarily meet with in India, there are good souls and true who are working with a true heart, realising their responsibility to the World and the Empire.

# கே. எஸ். முத்தையா அண்டு கம்பெனி
# பட்டு வர்த்தகம், ஸ்ரீ காசி.

---

## பணம் ஒருபொழுதும் மோசமில்லை.

"பணம் போட்டாலும் பட்டுக்கு போடு" என்ற முதுமொழியும் கவனிக்கத்தக்கது.

அன்னிய நாட்டு மல் துணிகளை தோற்கச் செய்யும்படியான அழகுள்ள எங்கள் வெண் பட்டாடைகளை வாங்க வேண்டுமென்பதற்கு நான்கு பலத்தகாரணங்களுண்டு.

ஏன்? நீடித்துப் பலம் செய்வதிலும், மனதை சதாவும் கழிக்க செய்வதிலும் சிறந்தது.

ஏன்? மிருதுவும், நைசும், அழகான தோற்றமும் சலவை செய்தாலும் திரைந்து கெட்டுப்போகாத தன்மையுமுடையது.

ஏன்? சலவை மல், மசலின் துணிகளோடு இணையிட்டுப் பார்ப்பீர்களாகில் அவற்றைப் பார்க்கிலும் நெடுநாள் பலம் செய்வதால் நீடித்து இருப்பதால் விலையில் அவைகளுக்குத் தாழ்ந்தும் குணத்திலோ சிறந்தும் இருப்பதை யறிவீர்கள்.

ஏன்? சேலம், காஞ்சிபுரம், மதுரை முதலிய விடங்களில் தயாரிக்கிற நூலை வஸ்திரங்களுக்கு 'போட்ப்பட்டிருக்கி மாதிரி சகல விதமான கரைகளும் போட்டிருப்பதை கண்டு சந்தோஷப் படுவீர்கள்.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 4 | முழ நீளம் | 30 | இஞ்சு அகலம் | விலை | 1-க்கு | ரூ. | 4 | 0 | |
| 6 | ,, | 44 | ,, | ,, | ,, | ரூ. | 7 | 0 | 0 |
| 6 | ,, | 48 | ,, | ,, | ,, | ரூ. | 8 | 0 | 0 |
| 7 | ,, | 48 | ,, | ,, | ,, | ரூ. | 9 | 0 | 0 |
| 8 | ,, | 48 | ,, | ,, | ,, | ரூ. | 10 | 0 | 0 |
| 10 | ,, | 48 | ,, | ,, | ,, | ரூ. | 13 | 0 | 0 |
| 16 | ,, | 44 | ,, | ,, | ,, | ரூ. | 20 | 0 | 0 |
| 18 | ,, | 44. | ,, | ,, | ,, | ரூ. | 23 | 0 | 0 |

ஆங்கிலேயர்களால் மதிக்கப் பெற்றது

## பித்தளை விளையாட்டு ஜோடிப்பு.

(ஜோடிப்பு 1 க்கு 32). குழந்தைகளின் மனதை ரசிக்கசெய்யக் கூடிய அழகுள்ளது.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| பெரிய ஸயிஸ் | ஜோடிப்பு | 1-க்கு | ரூ. | 3 | 8 | 0 |
| மத்திமஸயிஸ் | ,, | ,, | ரூ. | 2 | 0 | 0 |
| சிறிய ஸயிஸ் | ,, | ,, | ரூ. | 1 | 8 | 0 |

எங்கள் கம்பெனி பெரிய கேட்லாக் இனாம் அனுப்புவோம்.

## கே. எஸ். முத்தையா அண்டு கம்பெனி, ஸ்ரீ காசி.

PRINTED AT THE SOUTH INDIAN PRESS 18- LINGHI CHETTY ST., G. T. MADRAS.